

ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்

# குறள் முழக்கம்




திருவள்ளுவர் ஆண்டு-2056 பங்குனி-27 பொ.ஆ.2025- ஏப்பிரல்-10

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் வெளியிடும் இலவச இணையத் திங்களிதழ்

## பனிக்கூழ் அளித்த பாத்தேறல் இளமாறன்

சிங்கப் பூரின் குடிமகனார்
சிறந்த குழந்தைக் கவிமகனார்
பொங்கல் விருந்து போல்இனிக்கும்
புதுப்புது பாட்டு நூல்தந்தார்
‘பனிக்கூழ்’ என்ற நூலோடு
பாட்டுப் பேழையும் தந்தவராம்
கனியை மிஞ்சும் இசைப்பாட்டால்
களித்துத் துள்ள வழிசெய்தார்
‘திங்கள்’ என்ற ஒருநூலும்
சிறுவர் மகிழத் தந்தவராம்
தங்கத் தேர்போல் அதில்பாட்டு,
தாளம் போட்டுப் பாடவைக்கும்!
சிறுசிறு சொற்கள் விளையாடும்
திகட்டாத் தேனாய்ச் சுவைகூட்டும்
அருமைச் சிறுவர் மேன்மையுற
அழகாய் வழிகள் அதுகாட்டும்
மேன்மை மிக்க ‘தமிழவேள்’
விருது பெற்ற பாவலராம்!
நாவன் மையினால் மேடையிலே
நற்றமிழ் முழங்கச் செய்தவராம்!
‘பாத்தே றல்’எனப் புகழ்கொண்டார்
பைந்தமிழ் உயரப் பணிசெய்தார்
மூத்த பாவலர் அவர்பாக்கள்
வென்று நிலைக்கும் அவர்வாழ்க!
-----முனைவர் முரசு நெடுமாறன்




சிங்கப்பூரின் மூத்த கவிஞர் பாத்தேறல் இளமாறன் காலமானார். அவருக்கு வயது 80.

தனித்தமிழில் இலக்கியம் படைப்பதில் சிறந்து விளங்கிய பாத்தேறல் இளமாறன் சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் செயலாளராகவும் துணைத் தலைவராகவும் பொறுப்பு வகித்தார்.1989ல் அவருக்குப் "பாத்தேறல்" என்ற பட்டத்தை மறைந்த மலேசிய முன்னாள் அமைச்சர் ச.சாமிவேலு வழங்ச் சிறப்பளித்தார்.சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் தமிழவேள் விருதை 2007ஆம் ஆண்டில் பெற்றார்.[2/1/1945-27/3/2025]

# சிங்கப்பூர்த் தமிழ்க் கவிஞர் பாத்தேறல் இளமாறன்



முனைவர் கோட்டி திருமுருகானந்தம் 'சிங்கப்பூர்த் தமிழ்க் கவிதைகள்-ஓர் ஆய்வு' என்னும் தலைப்பில் ஆய்வு செய்து பாரதிதாசன் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றுள்ளார்.ஆசிரியப் பயிற்சி முடித்ததும் ஜஸ்டிஸ் பசீர் அகமது சையது நினைவு மெட்ரிக்குலேசன் ஆண்கள் மேனிலைப் பள்ளியில் முதுகலை தமிழாசிரியாக 1985 ஆம் ஆண்டு முதல் 1993 ஆம் ஆண்டு வரை பணியாற்றியுள்ளார். 1994 ஆம் ஆண்டு முதல் சிங்கப்பூர்க் கல்வி அமைச்சின் கீழ் இயங்கும் தொடக்கக் கல்லூரியில் தமிழ்மொழி, தமிழ் இலக்கியம் கற்றுக் கொடுத்து வருகிறார்.

சிங்கப்பூர், மலாயாவில் வெளிவந்துள்ள தமிழ்க் கவிதை நூல்களைத் தொகுத்து சிங்கப்பூர்த் தமிழ்க்கவிதை வரலாறு என்னும் நூலை 2012 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்." பன்முக நோக்கில் சிங்கப்பூர்க் கவிதைகள் "என்னும் நூலும் சி கு மகுதூம் சாயபுவும் சிங்கை நேசனும்-ஓர் ஆய்வு என்னும் நூலும் பாராட்டுப்பெற்ற இவரது படைப்புகள். சிங்கப்பூர் இதழியல் வரலாறு என்னும் நூலை 2019 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். நுண்ணாய்வு நோக்கில் தமிழ் முரசு நாளிதழ்க் கவிதைகள், சிங்கப்பூர்ப் பெண்பாற் கவிஞர்கள் ஆகிய இரு நூல்களை 2023 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். சிங்கப்பூர்த் தமிழ்க்கவிதை வரலாறு என்னும் இவருடைய முதல் நூலுக்குச் சிங்கப்பூர் அரசின் புத்தக மேம்பாட்டு நிறுவனம் வழங்கிய சிங்கப்பூர் இலக்கிய விருதினை 2014 ஆம் ஆண்டு பெற்றுள்ளார்.சிங்கப்பூர்த் தமிழ்க் கவிதை தோன்றிய 1863 ஆம் ஆண்டு முதல் 2022 ஆம் ஆண்டு வரையுள்ள கவிதைகளில் 1001 கவிதைகளைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டுள்ளார்.

சிங்கப்பூர்த் தமிழ்க் கவிஞர்களில் மூத்த கவிஞரான மெ இளமாறன் தனித்தமிழ்ப் பற்றாளர், சமையல் வல்லுநர், கவிஞர், சிறுகதையாசிரியர், இதழாசிரியர், சமூகப் பணியாளர், குடும்பத் தலைவர் எனப் பன்முக ஆற்றல் வாய்க்கப் பெற்றவர். இவர் தாயகத்தில் பிறந்து வளர்த்து சிங்கப்பூரில் கவிஞராகப் போற்றப் பட்டவர்.

தஞ்சாவூர்ப் பட்டுக்கோட்டைக்கு அருகிலுள்ள நாட்டுச்சாலை என்னும் பகுதியில் 02-01-1945 ஆம் நாளன்று பிரமையன், சின்னப்பிள்ளை அம்மாள் தம்பதியினருக்கு மகனாக இளமாறன் பிறந்தார். இவரது இயற்பெயர் மெ ஆண்டியப்பன் என்பதாகும். பன்னிரெண்டாம் வயதில் சிங்கப்பூர் வந்த இவருக்குச் சமையல் கைவந்த கலையாகும். இதனால் உணவுத்

தொழிலில் ஈடுபட்டார். சிறுவயதில் தாயகத்தில் காடுகாக்கப் போகும்போது பாட்டுப் புத்தகங்களை எடுத்துச் சென்று உரத்த குரலில் பாடினார். பின்னர் சிங்கப்பூர் வந்து தமிழார்வம் மிக்க குடும்பத்தில் சமையல் உதவியாளராகச் சேர்ந்தவருக்கு நிறைய புத்தகங்கள் படிக்க வாய்ப்புக் கிடைத்தது. அதைப் பயன்படுத்தி யாப்பிலக்கண நூல்களைக் கற்றார். தொடக்கத்தில் தமிழ் முரசு மாணவர் மணிமன்றத்தில் துணுக்குகள் எழுதினார். இவரின் முதல் கவிதை 1964 ஆம் நாள் தமிழ் மலரில் வெளிவந்துள்ளது. இத்தைத் தொடர்ந்து தமிழ் முரசு, தமிழ் நேசன் முதலிய நாளிதழ்களில் கவிதை படைத்துறள்ளார். கவிதைகளுடன் சிறுகதையும் எழுதி உள்ளார். வானொலி, தொலைக்காட்சிக்கு அதிகமான பாடல்களை எழுதியுள்ளார். இவர் பாடல்களில் மொழிப்பற்றும் இனப்பற்றும் விரவிக்கிடக்கின்றன. சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகச் செயலாளராகவும் பின்னர் துணைத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். கொள்கை முழக்கம் எனும் திங்கள் இதழின் ஆசிரியராகச் சில காலம் பணியாற்றி உள்ளார். கலைச்செல்வி என்னும் மாத இதழைச் சிலகாலம் நடத்தி உள்ளார்.

படைப்புகளும் விருதுகளும்: பாத்தேறல்(1981), முருகன் காவடிப் பாடல்கள்(1982), நினைக்க சுவைக்க(1997), பனிக்கூழ்(1988), திங்கள்(1988), குமுறல்(2002), சிதறல்கள்(2010), தேறலின் தூறல்(2016) முதலிய கவிதைத் தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். முருகன் பாடல்கள், மழலையர் பாடல்கள், பட்டுக்கோட்டை பாடல்கள், மாமாரி மாகாளி ஆகிய ஒலிநாடாக்களை வெளியிட்டுள்ளார். மண்மணச் சிறுகதைகள் என்னும் சிறுகதைத் தொகுப்பை 2014 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார். இவருக்குப் பாத்தேறல் என்னும் பட்டத்தை மலேசியப் பொதுப்பணிதுறை அமைச்சரும் மலேசிய இந்தியர் காங்கிரஸ் தலைவருமான டத்தோ ச சாமிவேலு 1989 ஆம் ஆண்டு வழங்கிச் சிறப்பித்தார். சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம் 2007 ஆம் ஆண்டு இவருக்குத் தமிழ்வேள் விருது வழங்கிப் பெருமைபடுத்தியது. 2017 ஆம் ஆண்டு கவிமாலை வழங்கிய கணையாழி விருதினைப் பெற்றுள்ளார்.

தமிழர்கள் வளமாக வாழவேண்டும் என்றால் அதற்குத் தமிழர்களும் தமிழ் அமைப்புகளும் இணக்கமுடன் இயங்கவேண்டும். கூட்டங்கள் கூட்டி கொள்கைகளைக் கூறுகிறோம் எனக் காலங்கழித்து போதும். இனி தமிழர்கள் வாட்டங்கள் போக்கி ஓங்கிட வழிகாண வேண்டும். தமிழர்கள் வளமாக வாழவேண்டும் எனச் சொல்லிக் கொண்டு இருப்பதை நிறுத்திவிட்டு அதைச் செயலில் காட்டிட வேண்டும். விழாக்கள் என்ற போர்வையில் பணத்தை விரயமாக்கும் செயல்களை நிறுத்தி தமிழ்க் குடும்பங்கள் உயர்ந்திட வழிகாண வேண்டும். இதைப் போன்ற செயல்களை நிறுத்திவிட்டு பணத்தைச் சேமித்து குழந்தைகளை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும். இப்படிச் செய்தால் எதிர்காலச் சமுதாயம் சிறக்கும்.

கூட்டங்கள் போட்டது போதும்-நாளும்
கொள்கைகள் சொன்னது போதும்
வாட்டங்கள் போக்கிட வேண்டும்-இங்கே
வண்டமி ழரோங்கிட வேண்டும்

விழாக்கள் எடுத்தது போதும்-காசை
விழலுக்கி றைத்தது போதும்
குழாத்தை உயர்த்திட வேண்டும்-தமிழர்

குடும்பங்கள் உயர்ந்திட வேண்டும்

காலத்தை நம்பியது போதும்-தலைவர்
கழறிய மொழி களும் போதும்
கோலத்தை மாற்றிட வேண்டும்-நம்மின்
குழந்தைகள் உயர்ந்திட வேண்டும்

தொழிலுண்டென்று இருந்தது போதும்-உண்டுத்
தூங்கிடக் கிடந்தது போதும்
வழியுண்டு உயர்ந்திட சொல்வேன்-நீங்கள்
வகையோடு நடந்திட வேண்டும்

எடுக்கின்ற ஊதியந் தன்னில்-ஏதோ
இருக்கின்ற தொகையதனைச் சேர்த்து
படிக்கின்ற பாலரை முடுக்கி-கல்விப்
பட்டங்கள் பெறச்செய்ய வேண்டும்

(இளமாறன், தமிழ் மலர், 28-01-1968)

எனக் கவிஞர் இளமாறன் மலாயா தமிழர்கள் வாழ்க்கை வளமாவதற்குரிய வழிகளைப் பாடியுள்ளார். கவிஞர் கூறிய கருத்துகளை மலாயா தமிழர்கள் அதிகம் பின்பற்றுவதாகத் தெரியவில்லை. இன்றும் சிங்கப்பூர், மலேசிய தமிழர் மத்தியில் விழாக்களை நடத்தும்போக்கு அதிகமுள்ளதைக் காணமுடிகிறது.

தமிழகத்திலிருந்து வந்து வேலை செய்யும் பணியாளர்களை ஊர்க்காரன் என்றழைக்கும் போக்கு சிங்கப்பூரில் நிலவுகிறது. அவர்களும் நம் இனத்தைச் சார்ந்தவர்கள்தானே என்ற எண்ணம் சிங்கப்பூரில் பிறந்து வளர்ந்தவர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. இந்நிலையில் அவர்களைச் சமாதானப்படுத்தும் விதத்தில் சிங்கப்பூரின் மூத்த கவிஞர்கள் அவர்களுக்கு ஆதரவாகச் சில பாடல்களைப் படைத்துள்ளனர்.

ஊர்க்காரன் என்றழைத்தால் உளம்நோகும் தோழாபார்
உனைநினைந்தே உருகுகின்றேன் உள்ளபடி தாழ்வாய் தான்
வேர்க்கடலை நிலக்கடலை வேறுபாடு உண்டோ சொல்

(இளமாறன், தமிழ் முரசு, 21-02-1999)

என்ற பாடலடிகளில் இளமாறன் தாயகத் தமிழர்களின் காவலனாக உள்ளதைக் காண முடிகிறது. இப்படி சிங்கப்பூர்த் தமிழர்கள் அவர்களுக்கு ஆதரவாக இல்லாவிட்டாலும் பரவாயில்லை. அவர்களைத் தூற்றாமல் இருந்தால்போதும். தமிழர் என்னும்போது அது அனைத்துத் தமிழ்ரகளையும் குறிக்கும் ஒன்றுதானே. சிங்கப்பூர்த் தமிழன், இந்தியத் தமிழன், மலேசியத் தமிழன், இலங்கைத் தமிழன் என்று கூறுவதில் பொருள் இல்லை. அனைவரும் தமிழர்களே என்ற போக்கு சிங்கப்பூர்த் தமிழர்களுக்கு வரவேண்டும் எனக் கவிஞர் விரும்புவதையும் காணமுடிகிறது. சாதிமுறை மாறாமல் இருப்பது போல் ஊர்க்காரன் என்ற உணர்வும் ஊறிக் கிடப்பதை இக்கவிதை உணர்த்துகிறது.

மனித வாழ்க்கைக்கு வேண்டிய உணவையும் நீரையும் காலந்தோறும் இயற்கை வழங்கி வருகிறது. அன்றாடம் மனிதன் பயன்படுத்தும் பொருள்கள் அனைத்தும் இயற்கையிலிருந்து பெறப் பட்டனவாகும். இயற்கை மனிதனுக்கு வாழ்வளித்து

வாழக் கற்றுக் கொடுக்கிறது. இயற்கை இல்லையென்றால் மண்ணில் ஈரமில்லலை, விளைச்சலில்லை, ஏன் மனித வாழ்க்கையும் இல்லை என உறுதியாகக் கூறலாம். இதை நன்குணர்ந்த முன்னோர் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தனர். இயற்கை அவர்களின் வாழ்வுடன் இரண்டறக் கலந்திருந்தது. இத்தகு ஆற்றல்மிக்க இயற்கையைச் சங்கப் புலவர் முதல் இன்றைய கவிஞர் வரை பாடியுள்ளனர். படைப்பவர்க்கும் கற்பவர்க்கும் இயற்கை இன்பமளித்து இலக்கியங்களில் உயிருடையதாகவும் உணர்வுடையதாகவும் போற்றப்படுகிறது. இயற்கையின் அருங்கொடைகளில் ஒன்றான தண்ணீர் சிறப்புகளைக் கவிஞர் திறம்பட பாடியுள்ளார்.

நீரென்போம் கடலிருந்தால் நீள்வானில் போய்க்கூடி நின்று விட்டால்
காரென்போம் துளித்துளியாய்க் கீழ்வீழின் மழையென்போம் கனிவாய் நல்ல
பேர்பெற்ற மழையாலே பீடுவரும் பசியொழியும் இல்லை யென்றால்
போர்உற்றே பொய்யுய்யும் உயிரழியும் பொலிவெல்லாம் போகும் மாய்ந்தே

உண்ணுகின்ற பொருளெல்லாம் உருவாக்கித் தரும்மழைதான் உணவாய்ப் பின்னே
தண்ணீராய் நின்றுதவும் தனமுடையார் இல்லாதார் தாழ்ந்தோர் மேலோர்
என்னும்பல பேதமெல்லாம் இங்கொழிக்கும் அதனிடத்தில் இல்லை சாதி
பெண்ணுறவும் பிள்ளைகுட்டி இன்னபிற செல்வ மெல்லாம் மழையே சேர்க்கும்

ஆளுமை வளர்ச்சி, மனிதப் பண்புள்ள நன்னடத்தைகள் எல்லாவற்றையும் பிள்ளைகளுக்குக் கற்றுத் தரவேண்டியது பள்ளிக்கூடத்தின் வேலை என நினைத்தால் அது முற்றிலும் தவறாகும். இதில் பெற்றோர்களுக்கும் சமுதாயத்திற்கும் பங்குண்டு. பள்ளிக்கூடத்தைவிட அதிகமான நேரத்தைப் பிள்ளைகள் பெற்றோர்களோடு செலவிடுகின்றனர். பள்ளிக்கூடத்திற்கு வெளியே உள்ள நண்பர் குழாமும் பிள்ளையின் வளர்ச்சியில் தாக்கம் செலுத்துவர். எனவே பிள்ளைகளின் பழக்க வழக்கங்களையும் நட்பு வட்டரத்தையும் பெற்றோர் கண்காணித்துப் பிள்ளைகளுடன் நெருக்கமாகப் பழகவேண்டும். இதனடிப்படையில் சிறுவர்களிடம், இளையர்களிடம் அன்புகாட்டி அறவழியில் வளர்த்தால் அவர்களது எதிர்காலம் ஒளிமயமாக இருக்கும்.

தூயநகர் வாழ்தமிழ இளைஞ னேகேள்
தொய்வில்லா உயர்நிலையைத் தொடநீ வேண்டின்
ஆயகலை அறுபத்து நான்கும் கற்றே
அண்டத்தில் அளவற்ற ஏற்றங் காண
நேயமுடன் பெரியோரை நேசிப் பாயே
நித்தமவர் அறவுரைகள் யாசிப் பாயே
காயமிது பொய்யென்பார் கருத்தைக் காய்ந்து
காலமிதில் வெல்வழிகள் பணி வாயே

வாழ்வை வளமாக்கும் கல்வியைக் கற்காமல் குறிக்கோளற்ற பறவைகளாகப் பாலைவனத்தில் திரிகிறார்கள். பாலைவனத்தில் ஏதுமில்லை என்பதை அறிந்தும் பறவை தன் உயிர் வாழ்க்கைக்குப் போராடுகிறது. அதைப் போல படிப்பைப் பாதியிலே கைவிடும் இளையர்களும் எதிர்காலத்தில் உயிர்வாழ போராட வேண்டிய நிலை வரும். ஆகவே இளையர்கள் நன்றாகக் கற்கவேண்டும் எனக் கல்வியின் தேவையை உணர்த்திய பாடல்களைப் பாடியுள்ளார்.

கற்க கற்கவே அறிவு தருவது அறக்குரல் அதுதான் திருக்குறள்

கற்க கற்கவே கனியை நிகர்த்தது சிலம்பொடு நந்திக் கலம்பகம்

கற்க கற்கவே சுவைகள் நிறைந்தது திருப்புகழ் வள்ளலார் அருட்கவி

கற்க கற்கவே நாளும் நாளுமே நூல்பல அறிவும் மேல்எழு

(மெ இளமாறன், நினைக்க சுவைக்க 1997)

எனக் கற்க வேண்டியதன் முதன்மையைப் பாடியுள்ளார்

இளமாறன் கவிதைகளில் தமிழ், தமிழர் என்பன அதிகம் இருந்தாலும் மக்களுக்கு வேண்டிய கருத்துகளையும் இவர் தொடர்ந்து பாடியுள்ளார். மலேசிய, சிங்கப்பூர்த் தமிழர்கள் எவ்வாறு வாழ வேண்டும், குழந்தைகளை எப்படி வளர்த்து ஆளாக்க வேண்டும் என்ற சிந்தனைகளைத் தம் பாக்களில் பதிய விட்டுள்ளார்.

சிங்கப்பூரின் மூத்த கவிஞரான இளமாறன் தனித்தமிழ்ப் பற்றாளர், கவிஞர், சிறுகதையாசிரியர், இதழாசிரியர், சமூகப் பணியாளர், குடும்பத் தலைவர் எனப் பன்முக ஆற்றல் வாய்க்கப் பெற்றவர். இவர் கவிதைகளில் தமிழ், தமிழர், சிறுவர், மகளிர், கல்வி, இறைவன், இயற்கை போன்ற சிந்தனைகளைப் பாடியுள்ளார். நாட்டுப்புறப் பாடல் வடிவத்திலும் பாடும் திறன் மிக்கவர். இவர் சிறந்த இதழாளர் என்பதை இவர் சில காலம் நடத்திய கலைச்செல்வி இதழ் உணர்த்துகிறது. மேலும் கொள்கை முழக்கம் என்ற இதழும் இவரது ஆற்றலைக் காட்டுகிறது.

அவரின் மறைவு சிங்கப்பூர்த் தமிழ் இலக்கிய உலகுக்குப் பேரிழப்பாகும்.ஓர் இலக்கிய ஆய்வாளர் என்னும் முறையில் இன்னும் அவரது பங்களிப்பையும் படைப்புத் திறனையும் விளக்கித் தனி நூல் எழுதுவேன்.இதனை ஒரு முன்னோட்டமாகக் கருதுமாறு வேண்டுகிறேன்.



நினைவேந்தல்

மும்பைத் தமிழ்ச் சங்கத்தின் தலைவரும் மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்றத்தின் ஆலோசகருமான **திரு. எஸ். ராமதாஸ்** அவர்கள் கடந்த 07-04-2025 அன்று இயற்கை எய்தினார்கள் என்பதனை அறிவிக்க வருந்துகிறோம். தமிழ்ச்சங்கத்துடன் மன்றம் இணைந்து நடத்திய பல்வேறு நிகழ்வுகளுக்கு வித்திட்டதோடு மன்றத்தின் எண்ணற்ற நிகழ்வுகளைத் தலைமையேற்றும் நடத்தியுள்ளார்.அன்பும், அறிவும், துணிவும், நேர்மையும், நேர மேலாண்மையும் கொண்டவர்.எடுத்துக் கொண்ட பணிகளை வெற்றிப்படுத்துவதில் தீவிர ஆர்வமுடையவர்.அன்னைத் தமிழுக்கு அணிசெய்துவந்த நல்லுள்ளம் ஒன்று நம்மை விட்டு மறைந்து விட்டது.அவர் விரும்பிய வழியில் மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்றம் தொடர்ந்து தமிழ்ப்பணியாற்றும் என்ற உறுதியோடு இரண்டு அமைப்புகளின் அங்கத்தினர்களுக்கும் அவரது இல்லம் மற்றும் இலக்கிய உறவுகளுக்கும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

வதிலை பிரதாபன் ,தலைவர் - மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்றம்

# மாமனிதருடன் ஒரு நாள் மகிழ்வுப்பயணம்

-

## அன்பு செயா, சிட்னி, ஆசுத்திரேலியா

இரண்டாயிரத்துப் பன்னிரண்டாம் ஆண்டு செப்டம்பர் - அக்டோபர் மாதங்களில் சிலம்பொலியார் ஐயா அவர்கள் ஆசுத்திரேலியாவின் சிட்னி நகருக்கு வருகை புரிந்திருந்தார்கள். அப்போது துர்க்கை அம்மன் கோயில் மண்டபத்தில் ஆசுத்திரேலியாவில் முதன் முறையாக நடைபெற்ற சிலப்பதிகார விழாவில் கலந்துகொண்டு பேருரை ஆற்றினார்கள். பிறகு சிட்னி முருகன் கோவில் மண்டபத்தில் பெரியபுராணம் பற்றி மூன்று நாட்கள் தொடர் சொற்பொழிவாற்றி அனைத்துத் தமிழர்களையும் தன்னுடைய நினைவாற்றலாலும் பேச்சாற்றலாலும் ஈர்த்தார்கள். நியூ சவுத் வேல்சு மாநிலத்தின் அனைத்துத் தமிழ்ப் பள்ளிக்கூடங்களும் ஒன்றிணைந்து நடத்திய இனிய தமிழ் மாலை - 2012 நிகழ்ச்சியில் சிறப்புரை ஆற்றி மாணவர்களை உற்சாகப் படுத்தினார்கள். மெல்பர்ன் நகரிலும் சிட்னியிலும் மேலும் பல கூட்டங்களில் உரையாற்றி இலக்கியச் சுடர் ஏற்றினார்கள்.



4. புத்தர் கோயில் பெரிய நுழைவாயிலுக்குமுன் (இடமிருந்து வலமாக); திருமதி சரசு செயா, திரு அன்பு செயா, சிலம்பொலியார், திருமதி இந்திரா மணி, திருமதி மணிமேகலை.

இந்த வருகையின் போது, ஐயாவும் அவருடைய மகள் மணிமேகலை அம்மா அவர்களும் அவர்களுடைய உறவினரும் எங்கள் நண்பருமாகிய பழனியப்பன் அவர்களுடைய இல்லத்தில் தங்கியிருந்தார்கள். இக்கூட்டங்களுக்குப் பிறகு ஒருநாள் ஐயாவிற்கு நண்பர் மணி அவர்கள் அளித்த விருந்தில் ஐயாவுடன் அளவளாவ வாய்ப்பு கிடைத்தது. இந்த உரையாடல்களின் போது சிட்னியைச் சுற்றியுள்ள சில முக்கிய இடங்களைச் சுற்றிப் பார்க்க ஐயா இசைந்தார்கள். அவர்களைச் சுற்றிப்பார்க்க அழைத்துச் செல்லுமாறு நண்பர் பழனியப்பன் என்னைக் கேட்டுக்கொண்டார். அதன்படி, அக்டோபர் 10ஆம் தேதி பயணம் செல்ல முடிவு செய்தோம்.




சிட்னியிலிருந்து உல்லாங்காங் செல்லும் வழியில் கடலின் பின்னணியில் சிலம்பொலியார்

முன்பு முடிவு செய்தது போல, அக்டோபர் 10ஆம் நாள் காலை ஒன்பதரை மணி அளவில் நானும் என் துணைவியார் சரசும் நண்பர் பழனியப்பன் அவர்களின் இல்லத்தை அடைந்தோம். ஐயாவும் மணிமேகலை அம்மா அவர்களும் தயாராக இருந்தார்கள். நாங்கள் நால்வரும் பத்து மணி அளவில் பழனியப்பன் அவர்கள் இல்லத்திலிருந்து மகிழுந்தில் புறப்பட்டோம். சிட்னியின் முக்கியப் புறநகர்கள் வழியாகப் பயணம் செய்து ஓல்சுவொர்தியில் உள்ள நண்பர் மணி அவர்களின் இல்லத்தை அடைந்தோம். அவருடைய துணைவியார் இந்திரா அவர்கள் எங்கள் மதிய உணவிற்குத் தேவையான பலவற்றைத் தயாராக வைத்திருந்தார். அவரையும் மகிழுந்தில் ஏற்றிக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டோம்.

ஓல்சுவொர்தியிலிருந்து கீத்கோட் சாலை வழியாக எங்கள் பயணம் தொடர்ந்தது. பல வாகனங்கள் அதில் பறந்து சென்று கொண்டிருந்தாலும் அந்தச் சாலைதான் எவ்வளவு அமைதியாக இருந்தது! ஏறத்தாழ 20 கிலோ மீட்டர் தொலைவிற்கு போக்குவரத்திற்கான தடை எதுவுமில்லாத இனிமையான பயணம். அந்தச் சாலைதான் எத்தனை அழகான வளைவு

நெளிவுகளையும், ஏற்ற இறக்கங்களையும் தன்னகத்தே கொண்டிருக்கிறது! ஒவ்வொரு முறையும் அதில் செய்யும் பயணம் மனதைக் கவர்வதாகவே இருக்கின்றது. அத்தனை அமைதி, அத்தனை அழகு மிக்க சுற்றுப்புறம். அந்தச் சாலை முடியும் இடத்தில் வலதுபுறம் திரும்பி பிரின்சசு நெடுஞ்சாலையில் எங்கள் பயணம் தொடர்ந்தது.



உல்லங்காங் புத்தர் கோயிலில் இரண்டு பௌத்த சிறுவர்களின் சிலைகளுடன் சிலம்பொலியாரும் அவருடைய மகள் திருமதி மணிமேகலை அவர்களும்

பிரின்சசு நெடுஞ்சாலையின் இரு மருங்கிலும் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருந்த மரங்கள். மலைகளின் பின்னணியில் அம்மரங்கள் படர்ந்து வளர்ந்திருந்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தன. இவற்றையெல்லாம் ஐயாவும் மற்றவர்களும் பார்த்து ரசித்துக்கொண்டு வந்தார்களென்றால் அது மிகையாகாது. பத்து, பதினைந்து நிமிடங்கள் அந்தச் சாலையில் பயணித்தபின் எலன்சுபர்க் என்ற இடத்தை அடைந்தோம். அங்குதான் சிட்னியில் முதன் முதலாகக் கட்டப்பட்ட இந்துக் கோயிலான அருள்மிகு வெங்கடேசுவரர் கோயில் உள்ளது. இப்போது அவ்வாலயம் அருள்மிகு சிவ-விசுணு கோயிலாகத் திகழ்கிறது. அங்கு தரிசனத்திற்காக நாங்கள் அனைவரும் இறங்கினோம்.

நாங்களெல்லாம் தரிசித்துக் கொண்டிருந்தபோது, ஐயா அவர்கள் அந்த கோயில்த்தின் அமைப்பினையும் அதன் அழகினையும் ஆராய்ந்து அனுபவித்துக் கொண்டிருந்தார் என்றுதான் சொல்ல வேண்டும். சிவன் கோயில் வளாகத்தில் மரத்தினால் செய்யப்பட்ட இராவணன் சிலையொன்று இருந்தது. அதை பார்வையிட்ட ஐயா ஒரு கேள்வியைக் கேட்டார்கள். அக்கேள்வி எதையும் அறிவு பூர்வமாகக் கூர்ந்துநோக்கும் ஐயாவின் இயல்பை வெளிப்படுத்தியது.

அவர் கேட்ட கேள்வி: "இந்தச் சிலையில் ஏன் இராவணனுக்கு 9 தலைகள் தான் வைத்திருக்கிறார்கள்?"

அந்தக் கேள்வியை ஐயா கேட்ட பிறகுதான் நான் தலைகளை எண்ணிப் பார்த்து அந்த சிலையில் இராவணனுக்கு 9 தலைகளே உள்ளன என்ற உண்மையை அறிந்துகொண்டேன். அப்பொழுது தலைமைக் குருக்கள் வேறு முக்கிய அலுவலில் இருந்ததால், அடுத்த முறை அவரைப் பார்க்கும்போது அதற்கான விளக்கத்தைக் கேட்டுத் தெரிவியுங்கள் என்று ஐயா என்னிடம் கூறினார். ஆனால், நாங்கள் வெங்கடேசுவரர் கோயில் வளாகத்திற்குச் சென்று திரும்புவதற்குள் அவருடைய கேள்விக்கான விடையையும் ஐயாவே கண்டுபிடித்திருந்தார். இராவணன் கையில் ஒரு வீணையைப் பிடித்திருந்தான். அந்த வீணையின் தலைப் பாகம் ஒரு மனிதனின் தலை உருவத்திலேயே இருந்தது. அதைச் சேர்த்து பத்துதலை இராவணனாகக் காட்சி கொடுக்கின்றான்.




புத்தர் கோயிலில் ஐந்து புத்தர் நிலைகள் உள்ள வழிபடும் அறைக்கு முன்னர் சிலம்பொலியார்

வீணையின் கதை: இராவணன் கைலாயத்தைத் தன் நாட்டில் வைக்க விரும்பி, கைலாயத்தைத் தூக்கிச்செல்ல முயன்றான். இதனால் மலையில் ஏற்பட்ட ஆட்டத்தை உணர்ந்த உமையாள் உதவிக்குச் சிவனை நாடினாள். நடந்ததை அறிந்த சிவன் தனது கட்டை விரலால் மலையைச் சற்று அழுத்த, அதிலிருந்து தப்பிக்க இயலாத இராவணன் தன் தலைகளில் ஒன்றையும் கைகளில் ஒன்றையும் வெட்டி வீணை செய்து, தனது நரம்புகளால் வீணைக்கு நரம்பு பூட்டி, சாம வேதப் பாடல்களைப் பாடினானாம். அவன் பாட்டினைக் கேட்டு மகிழ்ந்த சிவபெருமான் இராவணனைச் விடுவித்து அருளினார் என்பது புராணக் கதை.

கோயிலிலிருந்து மீண்டும் எங்கள் பயணத்தை உல்லங்காங் என்ற நகரை நோக்கித் தொடர்ந்தோம். அரை மணி நேரத்திற்குப் பின் உல்லங்காங்கில் உள்ள புத்தர் கோயிலை அடைந்தோம். அந்த கோயில் மிக அழகான இயற்கை சூழலில் அமைந்திருக்கிறது. அதனுடைய அழகும் அமைதியும் ஐயாவை மிகவும் கவர்ந்திருக்க வேண்டும். அதுவரை புகைப்படம் எடுத்துக்கொள்வதில் அதிக விருப்பமில்லாத ஐயா அந்த கோயிலின் சூழலில் புகைப்படம் எடுத்துக் கொள்வதில் சிறிது ஆர்வம் காட்டியது எங்களுக்கு மகிழ்ச்சியூட்டியது.

அக்கோயிலில் அமைக்கப்பட்டிருந்த சிறு சிறு சிலைகளின் அழகும், அந்த கோயில் இருந்த இடத்திலிருந்த அமைதியும் எங்கள் அனைவரின் மனத்தையும் ஈர்த்தது என்று கூறினால் மிகையாகாது. அந்த கோயிலைச் சுற்றிப் பார்த்த பின் எங்கள் வாகனத்திற்கு வந்து இந்திரா அவர்கள் எங்களுக்காகத் தயாரித்துக் கொண்டுவந்திருந்த பல உணவு வகைகளை உட்கொண்டு எங்கள் மதிய உணவை முடித்துக் கொண்டோம்.



புத்தர் கோயிலில் சிரிக்கும் புத்தர் சிலைக்கு முன்னர் சிலம்பொலியார்




சிலம்பொலியார் ஒரு புத்த குரு சிலைக்கு அருகில்

நண்பர் பழனியப்பன் வீட்டிற்குத் திரும்பச் செல்லும் முன் எங்களுடைய இல்லத்திற்கு சிறிது நேரம் வருகை புரியவும் ஐயா அவர்கள் ஒப்புதல் அளித்தார். பிறகு, சிட்னியை நோக்கி எங்கள் பயணத்தைத் தொடங்கினோம். சுமார் ஒரு மணி நேரத்திற்குப் பின் மேற்கு ஆக்சுடனில் உள்ள எங்கள் இல்லத்திற்கு வந்து சேர்ந்தோம். எங்கள் இல்லம் நேர்த்தியாகவும் சுத்தமாகவும் இருப்பதைக் கண்ட ஐயா அவர்கள் என் துணைவியாரை ‘கலையரசி’ என்று குறிப்பிட்டார். ஐயா சற்று இளைப்பாறிய பின் என் வீட்டில் உள்ள சிறிய நூலகத்தைப் பார்வையிட்டார். அங்கிருந்த உ. வே. சா. அவர்களின் சிலப்பதிகார உரை ஐயாவின் கவனத்தை ஈர்த்தது. உசாத்துணைக்காக அதை பெற்றுக் கொண்டு, அதை திருப்பக்

கொடுக்கும் போது, என் விருப்பத்திற்கிணங்க, அதில் தன் கையொப்பமும் இட்டுத் தந்தார். சிலம்பொலியாரின் கையொப்பம் நான் வைத்திருக்கும் சிலப்பதிகாரப் பதிப்பில் இருப்பது எனக்கு மிகவும் பெருமையாக உள்ளது.

சற்று நேரத்திற்குப் பின், எங்கள் இல்லத்திலிருந்து புறப்பட்டு நண்பர் பழனியப்பன் வீட்டிற்குப் பயணமானோம். அரை மணி நேரத்திற்குப் பின் அவருடைய வீட்டை அடைந்தோம். அங்கு அனைவருடனும் சற்று நேரம் உரையாடி விட்டு நானும் என் துணைவியாரும் இந்திரா அவர்களும் விடை பெற்றுக்கொண்டு எங்கள் விடு திரும்பினோம்.

இப்படிப்பட்ட மாமனிதருடன் எங்கள் வாழ்நாளில் ஒரு நாளை முழுமையாகக் கழிப்பதற்குக் கிடைத்த நல்வாய்ப்பிற்காக இறைவனுக்கு நாங்கள் நன்றி கூறுவதுடன் ஐயா அவர்கள் இன்னும் பல்லாண்டு பல்லாண்டு காலம் நலத்துடன் வாழ்ந்து தமிழுக்குத் தொண்டு செய்ய அருள் புரியுமாறு இறைவனை வேண்டிக்கொண்டோம்.